7th September 1960]

MR. SPEAKER : கனம் அங்கத்தினருக்கு சம்பந்தம் இருக்குமோ என்று தோன்றுகிறது, என்று சொன்னார்கள். It is not unparliamentary.

SRI A. GOVINDASAMY : நான் சம்பந்தப்பட்டிருப்பதாக . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு அந்த யோசனை இல்லாவிட்டால், ஏன் கவலைப்பட வேண்டும்? கவலைப் படவேண்டாம்.

*Hospital (Govindanagar)*

* 503 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலூகா, கோவிந்த நகரத்தில் ஆஸ்பத்திரி திறக்காததன் காரணம் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

*Christian Prayers*

* 504 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கிருஸ்தவ மிஷனரிகள் நடத்தும் உதவிபெறும் பள்ளிகளில் குறிப்பாக ஹாஸ்டலில் உள்ள ஹிந்து மாணவர்களை சர்ச்சுக்குப் போய் தொழும்படியும், பிரார்த்தனையில் கிருஸ்தவ பாடல்களையே பாடும்படியும் கட்டாயப்படுத்தி வருவது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Government are not aware of any such practice.

SRI A. VEDARATHNAM : ஸார், 'ஸெகுலர் ஸ்டேட்டில்', இம் மாதிரி மதப் பிரார்த்தனை செய்வதும், மற்ற மதப் பிரார்த்தனைகளுக்கு இடமில்லாமல் செய்வதும் சரியா? அந்த இடங்களில் ஒரு மத சம்பந்தப்பட்ட பிரார்த்தனைக்குப் பதிலாக, காந்திஜி அவர்கள் செய்தது போல் சர்வமத பிரார்த்தனை நடத்த சர்க்கார் முன் வருவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : பள்ளிக்கூடங்களைப் பொறுத்தவரை, பள்ளிக்கூட நடவடிக்கையில் ஒரு ஐட்டமாக பிரார்த்தனையை வைத்துக்கொள்ளக் கூடாது. தனியாக, இஷ்டம் உள்ளவர்கள், பிரார்த்தனைகள் நடத்திக் கொள்ளலாம். அவரவர்கள், மற்றவர்கள் உரிமையைத் தெரிந்து கொண்டு சுமுகமாக நடத்தலாம். ஒருவருக்கொருவர் கசப்பும், வெறுப்பும், ஏற்படும்வண்ணம் நடப்பதும் கிளர்ச்சி செய்வதும் கூடாது.